Regd. No. TN/MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone; 420212 4 பக்கம் விலை 45 காசு



தமிழ்மொழி வளர,

தமிழ் மொழி வளர வேண்டுமென்ற மனப்பான்மை இருந்தால் மட்டும் போதாது. சுவையும் பயனுமுள்ள ஏடுகளையே படிக்க வேண்டும்.

-பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

நாகரிகம்

ஒருவன் தான் விரும்பும் நலன்கள் அனைத்தும் பிறருக்கும் உண்டாகச் செய்வதுதான் நாகரிகம். அதற்கேற்ற வகையில் நமது உழைப்புப் பயன்பட வேண்டும்.

-தந்தை பெரியார்



மலர்: 7 சென்னை: 27 - 6 - 83 திங்கள் வெளியூர்: 28 - 6 - 83 செவ்வாய் இதழ்: 248




சென்னையில் நடிகர் கமலஹாசனுக்கு நடந்த பாராட்டு விழாவில், சத்துணவுத் திட்டத்திற்காக முதல்வர் புரட்சித்தலைவரிடம் ரூ. 10 ஆயிரத்தை கமலஹாசன் நன்கொடையாக வழங்கினார்.



நடிகர் கமலஹாசனுக்கு நடந்த பாராட்டு விழாவில் முதல்வர் புரட்சித்தலைவர், நடிகர் அமிதாப்பச்சன்.

சென்னை நகரில்

## திமுகதலைமையிலான 14 கட்சி ஊர்வலம் படுதோல்வி கண்டது

**சென்னை, ஜூன் 27- திமுக தலைமையில் 14 கட்சிகள் நடத்திய பேரணி சென்னையில் படுதோல்வியைச் சந்தித்தது**

தமிழக அரசைக் கண்டித்து பேரணி என்ற பெயரில் தி. மு. க. தலைமையிலான உதிரிக் கட்சிகள் நேற்று சில இடங்களில் ஊர்வலம் நடத்தின.

சென்னையிலும் நேற்று இந்த ஊர்வலம் நடந்தது. ஊர்வலத்தில் பங்கேற்க பெரும்பாலான தி. மு. க. தொண்டர்கள் வரவில்லை.

அடிக்கொருதரம் ஊர்வலம், போராட்டம் என்று கருணாநிதி அறிவித்து வந்ததால் அலுப்பும், சலிப்பும் அடைந்ததே தி. மு. க. தொண்டர்கள் இந்த ஊர்வலத்தில்பங்கேற்காததற்கு காரணம் என்று கூறப்படுகிறது.

சென்னையில் தொண்டர்களே இல்லாத அனந்தன் கட்சி சார்பாகவும் நெடுமாறன் கட்சி சார்பாகவும் 100 பேர் கூட ஊர்வலத்தில் வரவில்லை. இடது கம்யூனிஸ்ட், வலது கம்யூனிஸ்ட் தொண்டர்கள் ஓரளவுக்கு ஊர்வலத்தில் தென்பட்டனர், மற்ற லெட்டர்பேட் கட்சிகளின் சார்பில் ஓரிரு பேனர்கள்தான் தெரிந்தனவே தவிர ஆட்களைக் காணோம்.

கூட்டம் இல்லாத காரணத்தால் ஊர்வலம் அறிவித்தபடி குறிப்பிட்ட நேரத்தில் புறப்படவில்லை. நீண்டநேரம் கழித்துப் புறப்பட்டது. 14 கட்சிகளின் சார்பாக நடந்த இந்த ஊர்வலத்தில் சுமார் 8 ஆயிரம் பேரே பங்கேற்றனர்.

அதே போன்று ஊர்வல முடிவில் தண்டையார் பேட்டையில் நடந்த பொதுக்கூட்டத்திலும் கூட்டமே இல்லை.

ஒவ்வொரு கட்சித் தலைவர்கள் பேசி முடிந்ததும் அந்தந்தக் கட்சியினர் கூட்டத்தை விட்டு வெளியேறிவிட்டனர். இறுதியில் கருணாநிதி பேசும் போது மைதானம்கிட்டத்தட்ட காலியாகவே இருந்தது.

## கருணாநிதிஎழுதியதும் எழுத மறந்ததும்!

**மண்டியிட்டு வணங்கி, மாற்றான்பாதங்களில் மலர் தூவி மகுடங்களைப் பாதுகாத்துக் கொண்ட மனிதர்களும் உண்டு.**

— எழுதியது

மண்டியிட்டு வணங்கி, மாற்றான் பாதங்களில் மலர் தூவி வழக்குகளை வாபஸ் பெற்றுக்கொண்ட மனிதர்களும் உண்டு.

— எழுத மறந்தது

**பதவிப்பிரியர்களுக்கு சுகம், சேபிதம் அதிகாரம், ஆள், அம்பு, பல்லக்கு, பவிஷு இவைகள் இல்லாவிட்டால் உறக்கமே வராது, உழன்று கொண்டே இருப்பர்.**

— எழுதியது

மேலே எழுதியிருப்பது என்னுடைய நிலைமைதான். ஆனால் ஒரு வித்தியாசம். மற்றவர்கள் உறக்கம் வராமல் உழன்றுகொண்டிருப்பார்கள், நான் உளறிக்கொண்டே இருப்பேன்.

— எழுத மறந்தது

**ஜனநாயகம் பாதுகாக்கப்பட, கழகத்தின் செயற்குழுவைக் கூட்டி, நெருக்கடிப் பிரகடனத்தை எதிர்த்துக் குரல் கொடுத்தமைக்காக ஆட்சியை இழந்தோம்.**

— எழுதியது

இது உண்மையல்ல, சர்க்காரியா கமிஷன் அறிக்கையைப் படித்துப் பார்த்தால் தி. மு. க. ஆட்சி கலைக்கப்பட்டதற்கான காரணங்கள் முழு விவரமும் கிடைக்கும்.

— எழுத மறந்தது

**பதவிப் பசை சாதாரணமானதல்ல. ஒட்டிக் கொண்டால் பிய்த்துக் கொண்டுவர பலருக்கு மனம் வராது.**

— எழுதியது

இந்த சுகானுபவத்தை உணர்ந்து நான் கட்சிப் பதவிகள் அனைத்திலும் என் மருமகன், மகன்கள், வேலைக்காரர்கள் எல்லோரையும் திணிக்கிறேன்.

— எழுத மறந்தது

## கருணாநிதிக்கு இ. காங்கிரஸ் தலைவர்

# பகிரங்க சவால்

## 'எங்கள் ஆதரவுடன் வெற்றிபெற்ற தி.மு.க. எம்.பி.க்கள் ராஜினாமா செய்வார்களா?'

**பாண்டிச்சேரி, ஜூன் 27- தமிழ்நாட்டில் இந்திரா காங்கிரஸ் ஆதரவுடன் வெற்றி பெற்றுள்ள 15 தி.மு.க. எம். பி.க்களையும் ராஜினாமா செய்ய சொல்லத் தயாரா? என்று தி. மு. க. தலைவர் கருணாநிதிக்கு புதுவை இந்திரா காங்கிரஸ் எம். பி. சண்முகம் சவால் விடுத்துள்ளார்.**

இந்த சவாலை ஏற்றால் நான் எனது எம்.பி. பதவியை ராஜினாமாசெய்யத் தயார் என்று சண்முகம் அறிவித்துள்ளார்.

புதுவையில் தி. மு. க. அரசுக்கு இந்திரா காங்கிரஸ் தனது ஆதரவை வாபஸ் பெற்றது தெரிந்ததே.

இதனால் புதுவையில் தி.மு.க. மந்திரிசபை மைனாரிட்டியாகியது. மந்திரிசபை டிஸ்மிஸ் செய்யப்பட்டது. சட்டசபை கலைக்கப்பட்டது. ஆளுநர் ஆட்சியும் பிரகடனப் படுத்தப்பட்டுள்ளது.

### தி. மு .க வசைமாரி

இதனை அடுத்து திமுகவினர் இந்திரா காங்கிரஸ் மீது வசைமாரித் தாக்குதலைத் தொடங்கிவிட்டனர் சரமாரியான சவால்களை மேடைகளில் முழங்கத் தொடங்கிவிட்டனர்,

புதுவை இந்திரா காங்கிரஸ் தலைவராக உள்ள பி. சண்முகம் எம். பி. யாகவும் இருக்கிறார்.

1980ம் ஆண்டில் இந்திரா காங்கிரஸ், தி.மு.க. கூட்டணி கட்சிகளாக தமிழகத்திலும் புதுவையிலும் போட்டியிட்டன.

### இந்திரா அலையால் வென்ற தி. மு. க.

நாடாளுமன்ற தேர்தலின் போது இந்திரா அலையால் திமுகவினர் பலர் எம்.பி.க்களாகி விட்டனர்.

அதற்கு முன்பு நடந்த நாடாளுமன்ற தேர்தலில் ஒரே ஒரு இடத்தை மட்டுமே திமுக பெற்று இருந்தது என்பதும் குறிப்பிடத்தக்கது.

1980-ம் ஆண்டு தேர்தலில் இந்திரா அலையால் திமுக வினர் தமிழ் நாட்டில் 15 பேர் வெற்றி பெற்றனர்.

புதுவையில் பி.சண்முகம் இந்திரா காங்கிரஸ் சார்பில் போட்டியிட்டு வெற்றி பெற்றார்.

தமிழ் நாட்டில் திருப்பத்தூரில் இருந்து இந்திரா காங்கிரஸ்-திமுக உறவில் வெடிப்பு ஏற்பட்டு பெரியகுளம் திருச்செந்தூர் இடைத் தேர்தல்களில் எதிர் எதிராக நின்று இறுதியில் உறவு முறிவு அறிவிப்பு வெளியிடப்பட்டது.

ஆனாலும் புதுவை கூட்டணி ஆட்சி தொடர்ந்தது.

அதற்குப் பிறகு அங்கும் உறவு முறிவு அறிவிப்பை இந்திரா காங்கிரஸ் வெளியிட்டது. இதனால் திமுக மந்திரி சபை டிஸ்மிஸ் ஆனது.

பதவி பறிபோன திமுகவினர் புதுவையில் எங்கள் ஆதரவுடன் வெற்றி பெற்ற பி. சண்முகம் தனது எம். பி. பதவியை ராஜிநாமா செய்ய வேண்டும் என்று கோரிக்கை விடுத்துள்ளனர்.

### தி.மு.க.வுக்கு இ. காங்கிரஸ் சவால்

இதற்குப்பதில் அளித்து புதுவை இந்திரா காங்கிரஸ் தலைவர் பி. சண்முகம் தி.மு. க. தலைவர் கருணாநிதிக்கு ஒரு சவால் விடுத்துள்ளார்.

புதுவையில் நடந்த ஒரு கூட்டத்தில் அவர் இந்த சவாலை வெளியிட்டார்.

தி. மு. க, ஆதரவுடன் வெற்றி பெற்றதாக கூறி என்னை ராஜினாமா செய்யும்படி திமுக வினர் கோரியுள்ளனர்,

1980-ம் ஆண்டு தேர்தலில் இந்திரா காங்கிரஸ் ஆதரவுடன் தமிழ்நாட்டில் திமுகவினர் 15 பேர் எம். பிக்களாக வெற்றி பெற்றுள்ளனர்.

இவர்கள் 15 பேர்களையும் ராஜிநாமா செய்யும்படி திமுக தலைவர் கருணாநிதி கூறத்தயாரா?

அப்படி அவர் கூறி அவர்கள் 15 பேர்களும் ராஜிநாமா செய்தால் நானும் எனது எம்.பி. பதவியை ராஜிநாமா செய்யத் தயார். இதை ஏற்க கருணாநிதி தயாரா என்று பி. சண்முகம் எம். பி. பேசுகையில் சவால் விட்டார்.

## மதுரை ஊர்வலத்தில் தி. மு. க.வினர் வன்முறை: கடைகள் மீது தாக்குதல்

**மதுரை,ஜூன்27- பதினான்கு கட்சி பேரணி என்ற பெயரில் மதுரையில் நடத்திய ஊர்வலத்தில், தி.மு.கவினர் வன்முறையில் இறங்கி கடைகள் மீது தாக்குதல் நடத்தினர்.**

தமிழக அரசைக் கண்டித்து பேரணி என்ற பெயரில் நேற்று ஆங்காங்கே தி.மு.க. வினரும், தி.மு.கவுக்கு ஜால்ரா தட்டும் கட்சிகளும் ஊர்வலம் நடத்தினர்.

பல இடங்களில் நடந்த ஊர்வலத்தில் ஆட்களே இல்லை, தி.மு.க இடதுகம்யூனிஸ்ட் வலது கம்யூனிஸ்ட் கட்சிகளோடு, லெட்டர் பேட் கட்சிகளான நெடுமாறன் கட்சி, குமரிஅனந்தன் கட்சி போன்ற 14 கட்சிகள் இந்த ஊர்வலத்தில் பங்கேற்றன,

மதுரையில் நேற்று நடந்த இவர்களது ஊர்வலத்திலும் கூட்டம் இல்லை இவர்கள் ஊர்வலத்துக்கு பொதுமக்களிடையே வரவேற்போ. மரியாதையோ இல்லை.

மதுரையில் இவர்கள் ஊர்வலம் வந்ததைப் பார்த்தும், எழுப்பிய முழக்கங்களைக் கேட்டும் பொதுமக்கள் பரிகாசமாகச் சிரித்தனர்.

இதனால் ஆத்திரமடைந்த ஊர்வலத்தினர் வன்முறையில்இறங்கினர்.

ஊர்வலம் செல்ல அனுமதி பெற்ற சாலைகளை விட்டு, அக்கம் பக்கத்து சாலைகளில் எல்லாம் இவர்கள் இஷ்டத்துக்கும் புகுந்து புகுந்து வந்தனர்.

அப்படி வரும் போது கழகத் தோழர்களின் கடைகளைத் தாக்கினார்கள். கழகக் கொடிக் கம்பங்களை முறித்தார்கள்.

### திமுக காலிகளின் அட்டகாசம்

மதுரை நகர் மாவட்டக் கழகச் செயலாளர் எஸ். பாண்டியனின் பழக்கடை மதுரை யானைக்கல் பகுதியில் இருக்கிறது ஊர்வலத்தில் வந்த காலிகள் அந்தக் கடை மீது சோடா புட்டிகளையும் கற்களையும் வீசித் தாக்கினார்கள்.

மதுரை கீழமாரட் வீதியில் கழகத் தோழர் பரமன் அன்னை சத்யா காபிபார் என்ற காபிக் கடை வைத்திருக்கிறார். இந்தக் கடையையும் தி.மு.க. கூட்டணியினர் தாக்கிச் சேதப் படுத்தினார்கள்.

டவுன்ஹால் ரோட்டில் முன்னாள் கழக எம்.எல். ஏ, லட்சுமிநாராயணனின் தம்பி பால் கடை நடத்தி வருகிறார். அந்தக் கடை மீதும் ஊர்வலத்தினர் தாக்குதல் நடத்தினர். கடையில் இருந்த பாத்திரங்கள் மற்றும் பொருட்கள் பெருமளவு சேதமடைந்தன.

வடக்கு மாசி வீதி உட்பட பல இடங்களில் இருந்த கழகக் கொடி மரங்களையும் தி. மு. க. காலிகள் வெட்டி வீழ்த்தினர்.

## கிரிக்கெட்: கேரள சட்டசபை பாராட்டு

திருவனந்தபுரம், ஜூன் 27— உலகக் கோப்பை கிரிக்கெட் போட்டியில் இந்திய அணி வெற்றி பெற்றது தெரிந்ததே.

இந்தியஅணியின் அபார சாதனையைப் பாராட்டி கேரள சட்ட மன்றத்தில் ஏகமனதாக தீர்மானம் ஒன்று நிறைவேற்றப் பட்டது.

விளையாட்டுத் துறை அமைச்சர் கே.பி. நூருதீன் இந்த தீர்மானத்தை முன் மொழிந்தார்.

சட்ட மன்றத்தில்உள்ள பல்வேறு கட்சித் தலைவர்களும் கபில் தேவையும், இந்திய அணியின் மற்ற வீரர்களையும் பாராட்டிப் பேசினர்.

61 ஆயிரம் கால்நடைகள் சாவு

# குஜராத் வெள்ளம்: 53 ஆயிரம் வீடுகள் அடியோடு நாசம்

## ஹெலிகாப்டரில் பிரதமர் இந்திரா பார்வையிட்டார்

**ஆமதாபாத், ஜூன் 27- குஜராத்தில் வெள்ளத்தால் பாதிக்கப்பட்ட பகுதிகளில் பிரதமர் இந்திரா ஹெலிகாப்டர் மூலம் சுற்றிப் பார்த்தார். வெள்ளத்தின் விளைவாக 53 ஆயிரம் வீடுகள் நாசமடைந்துவிட்டதாக கூறப்படுகிறது.**

அரபிக்கடலில் உருவான புயலின் விளைவாக, குஜராத் மாநிலத்தை கடும் புயலும் மழையும் தாக்கியது தெரிந்ததே.

திடீரென கடும்புயல் தாக்கியதால், குஜராத் மாநிலத்தில் கடும் உயிர்ச் சேதமும், பொருட் சேதமும் ஏற்பட்டுள்ளது.

குறிப்பாக சவுராஷ்டிரா பகுதியில் பெரும் சேதம் ஏற்பட்டுள்ளது.

வெள்ளத்தால் பாதிக்கப்பட்ட பகுதிகளை பிரதமர் இந்திரா காந்தி இன்று(27 ந்தேதி) ஹெகாப்டர் மூலம் சுற்றி பார்த்தார். அவருடன், மாநில முதலமைச்சர் மாதவசிங் சோலங்கியும் சென்றார்.

இந்தபுயல்வெள்ளத்தில் இறந்தவர் எண்ணிக்கை 412 ஆக உயர்ந்துள்ளது. இது தவிர 355 பேரைக் காணவில்லை என்றும் கூறப்படுகிறது.

ஜுனாகத் மாவட்டத்தில் மட்டும் இறந்தவர் எண்ணிக்கை 339 இருக்கும் என அஞ்சப்படுகிறது.

### மீட்புப்பணியில் அரசு தீவிரம்

இந்த மாவட்டத்தில் உள்ள கிர் காடுகளில் ஏராளமான மரங்கள் புயலில் சிக்கி வீழ்ந்து விட்டன.

பல கிராமங்கள் வெள்ளத்தில் முழுவதும் மூழ்கி கிடப்பதால் சேத விவரம் முழுவதுமாகத் தெரியவில்லை.

61 ஆயிரத்திற்கும் மேற்பட்ட கால் நடைகள் வெள்ளத்தில் சிக்கிஇறந்து விட்டன,

40 ஆயிரம் வீடுகளும், 13 ஆயிரம் குடிசைகளும் வெள்ளம் மற்றும் புயலில் சிக்கிநாசமடைந்துள்ளது.

மீட்புப்பணியில் அரசு தீவிரமாக ஈடுபட்டுள்ளது:

## நமது மேடை

### 71-வது வட்டம்

நாள்: 27-6-83 திங்கள் மாலை 7 மணி, இடம்: செம்மண்பேட்டை பகுதி. தலைமை: ஜே. அருள் தாஸ். முன்னிலை: சு.வேலப்பன் பேசுவோர்: நீரோட்டம் அடியார், வண்ணை முத்துக்குமார், வ. கோதண்டராமன் ஜே. ஏ. தாஸ் வ. சீனிவாசன், எஸ்.பி. சண்முகம், நா.ரா. பாபு. பி.எல். இராதாகிருஷ்ணன், ஆ. செல்வராசன் மற்றும் பலர்.

நன்றி: டி. தன்ராஜ்,

மாலை 6 மணிக்கு டி. எம். ஜானி குழுவினரின் கலைநிகழ்ச்சியும் நடைபெறுகிறது. கூட்ட அமைப்பு:71 வது வட்ட கழகக் கிளை.

### அம்பத்தூர்

நாள்: 27-6-83 திங்கள் மாலை 6 மணி இடம்: அம்பத்தூர் பஸ் நிலையம் அருகில் தலைமை:- பெ. சகாதேவன், பேசுவோர்: ஜே. சி. டி, பிரபாகரன் எம். எல். ஏ., சைதை சா. துரைசாமி, ஆர். எஸ். மணி, சி. வி. விஜயன், எஸ். ராமன் மற்றும் பலர்.

கூட்ட அமைப்பு:- 25-வது வட்ட கழகக் கிளை அம்பத்தூர்.



# மேட்டூர் அணை திறப்பது எப்போது? ராஜாமுகமது பேட்டி

**சென்னை, ஜூன் 27- மேட்டூர் அணையில் இருந்து ஜூலை மாதம் 15-ந்தேதிக்கு பிறகே தண்ணீர் திறந்து விடப்படும் என அமைச்சர் ராஜாமுகமது கூறினார்.**

தமிழக நீர்ப்பாசனத் துறை அமைச்சர் ராஜா முகமது நிருபர்களிடம் கூறியதாவது:-

மேட்டூர் அணையின் கீழ் உள்ள நிலங்களுக்குப் பாசனத்துக்காக ஜூலை 15-ம் தேதிக்குப் பிறகு அணையின் உள்ள நீர் மட்டத்தின் அளவை பொறுத்துத்தான் திறந்து விடப்படும் நிலை உள்ளது.

ஏனென்றால் மேட்டூர் அணையில் இன்றைய நீர் மட்டம் 51.875 அடியாக இருக்கிறது.

கடந்த ஆண்டு இதே நாளில் 72.68 அடியாகஇருந்தது. குறைந்தபட்சம் மேட்டூர் அணையில் 75 முதல் 80 அடி தண்ணீர் இருந்தால் தான் விவசாயத்துக்கு தண்ணீர் திறந்து விட முடியும்.

### அரசு பரிசீலனை

ஏனவே தண்ணீர் வரத்தைப் பொறுத்தும் அணையின் நீர்மட்டத்தைப் பொறுத்தும் ஜூலை 15ம் தேதிக்குப் பிறகு நிலைமைகளை கவனித்து தண்ணீர் தருவது பற்றி அரசு பரிசீலிக்கும். இப்போது திறந்து விட்டால் விவசாயம் செய்வோரின் பயிர்கள் மழை பொய்த்துவிட்டால் கதிர் பிடிக்கும் நேரத்தில் காய்ந்து போகக்கூடிய நிலை ஏற்படலாம்.

எனவே சற்று காலதாமதம் ஆனாலும் பொறுத்திருந்து தண்ணீர் திறந்து விடுவது நல்லதாக இருக்கும்.

கிருஷ்ணகிரி அணைக் கட்டிலிருந்து புதிய கால் வாயில் இன்றைய தினம் தண்ணீர் திறந்து விடப் படுகிறது. அதன்மூலம் 9 ஆயிரம் ஏக்கர் புதிய ஆயக்கட்டுகள் பாசன வசதி பெறும். இந்தஅணையில்இப்போது 49 அடி தண்ணீர் இருக்கிறது. இந்த அணைக்கு நீர் வரத்து நன்றாக இருப்பதால் தர்மபுரியில் எல்லா பாசன ஆதாரங்களும் நன்றாக இருக்கும்.

தமிழகத்தில் நிலத்தடி நீர் வாரியம் மூலம் 400 உறை கிணறுகள் 300 லட்சம் ரூபாய் செலவில் அமைக்கப்பட உள்ளது.

இந்தப்பணிகள் ஆகஸ்டு மாதம் முடிந்து விடும் மத்திய அரசு 106 லட்சம் ரூபாய் கடனாக வழங்கியுள்ளது. தமிழக அரசு 194 லட்சம் ரூபாய் கடனாக கொடுத்துள்ளது

ஏரிமராமத்து கசிவு நீர் குட்டைகள் அமைப்பதற்கு 12 கோடியே 25லட்சம் ரூபாயைதமிழக அரசு ஒதுக்கியிருக்கிறது. 6 ஆயிரம் கண்மாய்களை பழுது பார்க்கவும் கரைகளை பழுது பார்க்கவும் 9 கோட்டங்களும் 63 துணைக் கோட்டங்களும் அமைக்கப்பட்டுள்ளன. 60 கசிவு நீர் குட்டைகளை அமைக்கும் பணிகள் துவங்கப் பட்டுள்ளன.

இதுவரை 4 கோடியே 3 லட்சம் ரூபாய் அளவு மதிப்புள்ள வேலைகள் நடைபெற்றுள்ளன 307 லட்சம் ரூபாய் பணம் தரப்பட்டுள்ளது. கல்பாக்கத்தில் உள்ள அணுமின்சக்தி நிலையத்துக்கு தினமும் 10 லட்சம் காலன் தண்ணீர் வழங்கும் பணியில் 56.85 லட்சம் ரூபாய் செலவில் பணிகள் முடிக்கப்பட்டுள்ளன அணுமின் சக்தி நிலையத்துக்கு தினமும் 30 லட்சம் காலன் தண்ணீர் தேவைப் படுகிறது, அவர்களுக்குக் கூடுதலாக தண்ணீர் தருவதற்காக மேலும் 78 லட்சம் ரூபாய் செலவில் கிணறுகள் அமைக்கும் பணிக்காகதிட்டம்தீட்டப் பட்டுள்ளது. இதற்குத் தமிழக அரசு அனுமதி அளித்துள்ளது. இதற்காக மத்திய அரசிடம் நிதி உதவி கேட்கப் பட்டுள்ளது.

### ரூ. 6.5கோடியில் திட்டங்கள்

வடகிழக்கு பருவமழை பெய்து சென்னை நகரில் வெள்ளம் புகாமல் தடுக்கும் வகையில் 4 திட்டங்கள் தீட்டப்பட்டுள்ளன.

ஒட்டேரி நல்லாகரையை பலப்படுத்த 22 லட்சம் ரூபாயும் பொன்னேரியில் உள்ள கொற்றலை ஆறு வெள்ளத்தடுப்புக்காக 160 லட்சம் ரூபாய் செலவிடப்படவுள்ளது. அமைந்தகரையில்இருந்து சேத்துப்பட்டு வரையில் உள்ள 2 பாலங்களுக்கும் கூவம் ஆற்றின் கரையை பலப்படுத்தவும் 93லட்சம் ரூபாயும் பொன்னேரி ஆரணி ஆற்றில் வெள்ளத் தடுப்புக் கரையை பலப் படுத்த 373 லட்சம் ரூபாயும் செலவிடப்படவுள்ளது.

இவ்வாறு அமைச்சர் ராஜாமுகமது கூறினார்.

# கர்னாடக மாநில கழக தோழர்களுக்கு

கர்நாடக மாநிலத்தில் நடைபெறவுருக்கும் மாநகராட்சி மற்றும் நகராட்சி தேர்தலில் போட்டியிட விரும்பும் கழகத்தோழர்கள் அந்தந்தத் தொகுதி செயலாளரிடம் மனுவைப் பெற்று உரிய கட்டணத்தோடு மனுவினை பூர்த்தி செய்து 30-6-83 மாலை 5 மணிக்குள்ளாக, பெங்களூர் சட்டமன்ற விடுதி 227-ல் சேர்ப்பிக்க வேண்டுகிறேன்.

கோலார் தங்கவயல் மனுவினை கீழ்கண்டவரிடம் பெற்றுக் கொள்ளலாம்.

கோலார் தங்கவயல்:

**எம் பக்தவத்சலம எம். எல். ஏ.**

ஷிமோகா:

**எஸ். கோவிந்தசாமி**

பத்ராவதி:

**எஸ் பொன்னையன்.**

மைசூர்:

**ஆர். ரவிராஜன்**

பெங்களூர் கழகத் தோழர்கள் சட்டமன்ற விடுதி 227-ல் போட்டியிடுவதற்கான மனுவினை பெற்றுக் கொள்ள வேண்டுகிறேன்.

அன்பன்

**பி. முனியப்பா,**

மாநிலச் செயலாளர்.

# கர்னாடகமாநில கழக செயற்குழு

கர்நாடக மாநிலத்தில் நடைபெறவிருக்கும் மாநகராட்சி, மற்றும் நகராட்சித் தேர்தலையொட்டி 30-6-83 மாலை 6 மணிக்கு கர்நாடக மாநில கழக செயற்குழுக் கூட்டம் பெங்களூர் சட்ட மன்ற விடுதி எண் 227-ல் நடைபெறும்.

செயற்குழு உறுப்பினர்கள் கலந்துகொள்ளுமாறு வேண்டுகிறேன்.

அழைப்பிதழ் தனித்தனியாக அனுப்பப் பட்டுள்ளது.

அழைப்பிதழ் கிடைக்காத தோழர்கள் இதனையே அழைப்பாக ஏற்று கலந்து கொள்ள வேண்டுகிறேன்.

அன்பன்,

**பி. முனியப்பா**

மாநில செயலாளர்

# பொறியியல் கல்லூரிகளில் கூடுதல் இடங்கள்

## அமைச்சர் அரங்கநாயகம் அறிவிப்பு

**மதுரை, ஜூன் 27- அதிக மாணவர்கள் படிப்பதற்கு தகுந்தபடி பொறியியல் கல்லூரி களில் கூடுதல் இடங்கள் ஏற்படுத்தப்படும்என்று கல்வி அமைச்சர் அரங்கநாயகம் தெரிவித்தார்.**

கல்வி அமைச்சர் அரங்கநாயகம் மதுரையில் நிருபர்களிடையே பேசினார்.

அப்போது அவர் கூறியதாவது:-

தற்போதுள்ள சில மேல்நிலைப் பள்ளிகளில் மாணவர்களின் எண்ணிக்கை குறைந்த அளவிலேயே இருக்கிறது.

அதனால் இந்தப் பள்ளிகளை சிக்கனமாக பராமரிக்க முடியாத நிலை ஏற்பட்டுள்ளது. மேல்நிலைப்பள்ளிகளை (ஹையர் செகண்டரி) மேலும் தொடங்குவதை விட தற்போதுள்ள பள்ளிகளை சீரான முறையில் நடத்துவது தான் நல்லது. அதற்கான நடவடிக்கைகளை அரசு முறையாக எடுத்து வருகிறது. தமிழை போதனா மொழியாக ஏற்படுத்தியுள்ளது நல்ல பயனையே அளித்து வருகிறது. தாழ்த்தப்பட்டவர்களுக்கு ஒதுக்கப்பட்டுள்ள 18 சதவிகித இடங்கள் எல்லாவற்றையும்அவர்கள் பயன்படுத்திக் கொள்ளலாம்.

பொறியியற் கல்லூரிகளில் மாணவர்கள் அதிக அளவில் சேர்ந்து படிப்பதற்கு இந்தக் கல்லூரிகளில் கூடுதல் இடங்கள் ஏற்படுத்தப்படும். தற்போதுள்ள பொறியியற் கல்லூரிகளில் உள்ள, சூழ்நிலை, வசதி, சாதனங்கள் ஆகியவற்றுக்கு தக்கபடி 10 சதவிகித இடங்கள் அதிகரிக்கப் படும் தொழிற் கல்விக்கு தமிழக அரசு முக்கியத்துவம் கொடுத்துவருகிறது அந்த அடிப்படையில் தான் இப்போது திருநெல்வேலியில் ஒரு பொறியியல் கல்லூரி துவங்கப்பட்டுள்ளது.

### சென்னையில் மேலும் ஒரு பொறியியற் கல்லூரி

தவிர சென்னையில் மேலும் ஒரு பொறியியற் கல்லூரி தொடங்கப்படவிருக்கிறது என்பதையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

நன்கொடை என்றபெயரில் மாணவர்களிடம் பணம் பறிக்கும் பள்ளிகள் மற்றும் கல்லூரிகள் மீது அரசு கடுமையான நடவடிக்கை எடுக்கும் என்பதையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

இது குறித்து தகுந்த ஆதாரத்துடன் புகார் அனுப்பும்படி பொது மக்கள் கோரப்படுகிறார்கள்,

இவ்வாறு அமைச்சர் அரங்கநாயகம் கூறினார்.

# நிர்வாகிகள் தேர்வு

திருச்சி, ஜூன் 27- திருச்சி மாவட்ட கூட்டுறவுஅண்ணாதொழிலாளர் சங்க பொது உறுப்பினர் கூட்டம் கடந்த15-ந்தேதியன்று ஏ, அங்கப்பன் தலைமையில் கரூர் பூஞ்சோலை செட்டியார் திருமண மண்டபத்தில் நடைபெற்றது.

அதுபோது 1983-84-ம் ஆண்டிற்கான புதிய நிர்வாகிகள் தேர்ந்தெடுக்கப் பட்டனர். கௌரவத் தலைவராக கே. பெருமாளும், தலைவராக ஏ. அங்கப்பன், பொதுச் செயலாளராக பி. பழனியப்பன், துணைத்தலைவர்களாக து. கிருஷ்ணசாமி, வி. பாலகிருஷ்ணன், பி. சிவசங்கரன், எல். கே. திருமகன் ஆகியோரும், துணைச் செயலாளர்களாக எம். கூத்தரசன், எஸ். சுபாஸ், டி. செல்வராசும், பொருளாளராக ஆர். கே. நாச்சிமுத்து மற்றும் நிர்வாக கமிட்டி உறுப்பினர்களும் தேர்ந்தெடுக்கப் பட்டனர். சி. சீனிவாசன் நன்றி கூறினார்,

15 கட்சி கூட்டணி துணையோடு வந்தாலும்

# புரட்சித்தலைவர் புகழை கருணாநிதியால் குறைக்க முடியாது

## கழக பொருளாளர் மாதவன் பேச்சு

**சிவகங்கை, ஜூன் 27- பதினைந்து கட்சி துணையோடு கருணாநிதி வந்தாலும் முதல்வர் புரட்சித்தலைவர் செல்வாக்கை குறைக்க முடியாது. அவரது செல்வாக்கு மேலும் மேலும் வளரும் என்று கழகப் பொருளாளர் மாதவன் கூறினார்.**

சிவகங்கை அருகே உள்ள காளையார் கோயில் நகரம், ஒன்றிய கழகத்தின் சார்பில் கழகப் பொருளாளர் மாதவனுக்குப் பாராட்டு விழா ஒன்றிய செயலாளர் வழக்கறிஞர் எஸ். கண்ணப்பன் தலைமையில் நடைபெற்றது.

கூட்டத்தில் கலந்து கொண்டு கழகப் பொருளாளர் மாதவன் பேசியதாவது:-

ராமநாதபுரம் மாவட்டத்தின் மீது புரட்சித் தலைவர் தனியாக பாசம் வைத்திருக்கிறார்.

### திமுக வெற்றுக்கூடாரம்

அவர் பதவிப் பொறுப்பை ஏற்ற உடனேயே மருது சகோதரர்களின் வாரிசுகட்குஉதவிப் பணம் வழங்குவதற்காக கமிட்டியை அமைத்து உதவிப்பணமும் வழங்கி வருகிறார்.

இன்று திராவிடஇயக்க வழி வந்தவர்கள் கழகத்தில் தான் உள்ளனர். திமுக வெற்றுக் கூடாரமாகிவிட்டது.

புரட்சித்தலைவர் எல்லோரையும் அரவணைத்துச் செல்கிறார்.

கருணாநிதியோ திராவிட பாரம் பரியத்தின் கொள்கையைகுழிதோண்டிப் புதைத்து விட்டார்.

இளைய தலைமுறைகளை புரட்சித்தலைவர் உருவாக்கி வருகிறார். கருணாநிதியோ தி. மு. க. வை குடும்பச் சொத்தாக்கி வருகிறார்.

பதவியையே நோக்கமாக கொண்டுகருணாநிதி செயல்பட்டு வருகிறார். பேரறிஞர் அண்ணாவின் கொள்கைகளை குழி தோண்டி புதைத்தவர் கருணாநிதி.

எப்படியாவது புரட்சித் தலைவரை ஆட்சியை விட்டு இறக்க படாத பாடுபட்டு வருகிறார். இன்று 15 கட்சிகளுடன் கூட்டு சேருகிறார்.

புரட்சித்தலைவரின் செல்வாக்கு நாளுக்குநாள் பெருகி வருகிறதே தவிர குறையவில்லை; மக்களின் ஆதரவும் உள்ளது.

ஏழைமக்களின் வாழ்க்கை முன்னேற்றத்திற்காக அதிக நன்மைகளைப் புரட்சித்தலைவர் செய்து வருகிறார்.

### கருணாநிதி புளுகு

இன்று பாண்டிச்சேரி அரசு கவிழக் காரணம் அவர்கள் ஆட்சி செயல்பட்ட விதம் தான். அவர்கள் செய்த ஊழல் குற்றச்சாட்டுகள் மக்கள் மன்றத்திற்கு வந்து விட்டது பதவிச் சண்டையினால் பதவியை இழந்தனர் அதை மறைத்து தென் மாநில முதல்வர்களின் கூட்டத்திற்கான பரிசு என்று கருணாநிதி கூறுவது அப்பட்டமான பொய்யாகும். வறட்சி நிலவும் தமிழகத்திற்கு அரிசி கேட்டு உண்ணாவிரதம் இருந்த ஒரே முதல்வர் புரட்சித் தலைவர்தான்.

ஆனால் டெல்லிக்கு சென்று தி. மு. க, வினர் புரட்சித்தலைவருக்குஆளத் தெரியவில்லை. அரிசி கொடுக்கக்கூடாது என்று கூறுகிறார்கள். இந்த அரசியல் எத்தனை நாளைக்கு நீடிக்கும்?

### மக்கள் பிரச்னை

தமிழக மக்களின் இதயங்களில் குடிகொண்டுள்ள புரட்சித்தலைவரை அழிக்க நினைப்பது 'சரித்திரத்தை மறைக்க' கருணாநிதி செய்துவரும் கடுங்குற்றமாகும்.

இதை அவர் விடுத்து மக்களின் பிரச்னைகளை தீர்க்கப்பாடுபடவேண்டும்

இவ்வாறு கழக பொருளாளர் மாதவன் பேசினார்.

மாவட்ட செயலாளர் பொ. அன்பழகன் எம்.பி. திருவாடானை சட்ட மன்ற உறுப்பினர் டி. அங்குசாமி, மாவட்ட துணைச் செயலாளர் வழக்கறிஞர் வெ. தியாகராசன் மாவட்டஅண்ணாவிவசாய சங்க செயலர்வழக்கறிஞர் கே ஆர் முருகானந்தம், கழக வழக்கறிஞர் சிவராமலிங்கம், மதிவாணன், மாவட்ட எம். ஜி, ஆர் மன்றச் செயலர் மானாமதுரை ராசேந்திரன், சிவகங்கை எம். ஜி. ஆர். மன்றத் தலைவர் தனபாலன் முன்னாள்கவுன்சிலர்கிருஷ்ணன், சிக்கந்தர் மற்றும் பலர் கலந்து கொண்டு பேசினார்கள்.

மாநாடு நடப்பதுபோல் வண்ண விளக்குகளாலும் கழகத் தோரணங்களினாலும் மேடை அலங்கரிக்கப்பட்டிருந்தது.

காளையார்கோயில்வட்டாரஜனதாகட்சிதலைவர் தைனேசும், இ,காங்கிரஸ் திமுக விலிருந்து பலரும் விலகிபொருளாளர்மாதவன் முன்னிலையில் கழகத்தில் சேர்ந்தனர்.

கொலை வழக்கு:

# இருவருக்கு ஆயுள் சிறை

சென்னை, ஜூன் 27— சென்னைஒத்திவாக்கத்தை சேர்ந்தவர் வஜ்ரவேலு, இவருக்கும் மாதவன், என்பவருக்கும் நிலத்தகராறு இருந்ததாம். இதில் ஏற்பட்ட சச்சரவில் மாதவனும் அவரது மகன் ராமதாசும் தாக்கியதில், வஜ்ரவேலு இறந்து போனார்.

இதையடுத்து மாதவனும், ராமதாசும் கைது செய்யப்பட்டு வழக்குத் தொடரப் பட்டது. வழக்கை விசாரித்த நீதிபதி இருவருக்கும் ஆயுள்தண்டனை விதித்து தீர்ப்புக் கூறினார்.

# மறைவு

கம்பம், ஜூன் 27— கம்பம் ஒன்றியம் கருநாக்க முத்தன்பட்டி கழக மேலமைப்புப் பிரதிநிதி சடையன்கடந்த23ந்தேதியன்று காலமானார். அன்னாரின் இறுதிச் சடங்கில் ஆர். பி. கோபாலன் எம்.எல்.ஏ. எஸ், சின்னச்சாமி உட்பட ஏராளமான கழகத் தோழர்கள் கலந்து கொண்டனர்.

# அமைச்சர் குழந்தைவேலு முன்னிலையில் தொழிலாளர்கள் 700பேர் கழகத்தில் சேர்ந்தனர்

கோவை, ஜூன் 27— கோவையில் பல்வேறு சங்கங்களைச் சேர்ந்த 700 தொழிலாளர்கள் அமைச்சர் குழந்தைவேலு முன்னிலையில் கழகத்தில் இணைந்தனர்.

கோவையில் உள்ள கங்கா டெக்ஸ்டைல்ஸ் ராமகிருஷ்ணாஇண்டஸ்ட்ரீஸ், கோத்தாரி மில்ஸ் லவரின் இன்ஜினியரிங் தொழிற்சாலை ஆகிய தொழிற்சாலைகளில் பணியாற்றும் எச்.எம்.எஸ். தி. மு. க. ஏ.ஐ.டி.யு.சி. சி. ஐ. டி. யு. தொழிற் சங்கங்களைச் சேர்ந்த தொழிலாளர்கள். அந்ததொழிற்சங்கங்களில் இருந்து விலகி கழக தொழிற் சங்கத்தில் சேர்ந்தார்கள்.

அவர்களுடன் 60 கூட்டுறவு சங்கங்களில் பணியாற்றும் வங்கி தொழிற் சங்கத்தினர்களும், மருத்துவத்துறை பணியாளர் சங்கத்தைச் சேர்ந்தவர்களும் ஆக மொத்தம் சுமார் 700 பேர்கள் கழக தொழிற்சங்கத்தில் சேர்ந்தார்கள்.

இவர்கள் அனைவரும் கோவைக்கு வந்திருந்த அமைச்சர் குழந்தைவேலு முன்னிலையில் கழகத்தில் சேர்ந்தனர்.

அப்போது கருப்புசாமி, கோவைமுத்து, எஸ் ஆர். கோபால், வேலுமணி, பழனிசாமி, பேரூர் சண்முக சுந்தரம் அரசு பணியாளர் சங்கம் சி அண்டு டி பிரிவு மாவட்ட செயலாளர் ராமலிங்கம் ஆகியோரும் உடனிருந்தனர்.

முன்னாள் ஜனாதிபதி

## சஞ்சீவ ரெட்டி உடல்நலக் குறைவு

அனந்தப்பூர், ஜூன் 27- முன்னாள் ஜனாதிபதி சஞ்சீவ ரெட்டிக்கு திடீர் என்று உடல் நலக்குறைவு ஏற்பட்டுள்ளது.

கடுமையான காய்ச்சல் அவருக்கு ஏற்பட்டு இருக்கிறது. நேற்று அவர் காலையில் வழக்கமாக செல்வது போல நடக்க முற்பட்டபோது திடீர் என்று சுகவீனப்பட்டார்.

வயிற்று வலியும் வாந்தியும் ஏற்பட்டதாகக் கூறப்படுகிறது. பிறகு கடுமையான ஜுரமும் ஏற்பட்டது.

அவரது தனி டாக்டர் ராமசுப்பையா அவருக்கு சிகிச்சை அளித்து வருகிறார்.

ஆந்திர முதல்வர் என். டி. ராமாராவ் சஞ்சீவ ரெட்டிக்கு தந்தி ஒன்றை அனுப்பிஇருக்கிறார்விரைவில் குணமடைய வேண்டும்என்றுராமாராவ் தெரிவித்துள்ளார்.

இதற்கிடையே சஞ்சீவ ரெட்டியை சிகிச்சைக்காக சென்னைக்குகொண்டுவர முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன.

மதுராந்தகம் அருகே

## கள்ளகடத்தல்: பொருட்கள் மீட்பு

மதுராந்தகம், ஜூன் 27- மதுராந்தகம் அருகே வந்து கொண்டிருந்த ஒரு லாரியைநிறுத்திபோலீசார் சோதனை போட்டனர். அதில் வீடியோகேசட் ஜிப்புகள் உட்பட ரூ. 2 லட்சத்து 50 ஆயிரம் மதிப்புள்ள கள்ளக் கடத்தல் பொருட்கள்இருந்தன, அவற்றைப் போலீசார் கைப்பற்றினார்கள்.

இதுசம்பந்தமாக 2 பேரை போலீசார் கைது செய்தனர்,

மதுராந்தகத்தில்

## போலீசார் மீது சோடா பாட்டில் வீச்சு

மதுராந்தகம், ஜூன் 27— குடிபோதையில் கலாட்டா செய்தவர்களை அடக்கச் சென்ற போலீசார் மீது சோடா பாட்டில்கள் வீசப்பட்டன இதில் 3 போலீசார்காயம் அடைந்தனர்.

சென்னையிலிருந்து நெல்லைக்கு போலீசார் வேனில் சென்று கொண்டிருந்தனர். அப்போது மதுராந்தகம் மார்க்கெட் அருகே குடி போதையில் சிலர் கலாட்டா செய்து கொண்டிருந்தனர். அவர்களைஅடக்கஇந்தவேனில் இருந்த போலீசார் இறங்கிச் சென்றனர். உடனே அந்தக் கும்பல், போலீசார் மீது சோடா பாட்டில்களை வீசி கலாட்டா செய்து தப்பி ஓடிவிட்டனர். இதனால் 3 போலீசார் காயமடைந்தனர். இதுகுறித்து மதுராந்தகம் போலீசார் வழக்குப் பதிவு செய்து தப்பி ஓடிய 15 பேர்களைத் தேடி வருகின்றனர்.

(6ம் பத்தி தொடர்ச்சி)

சிறந்தநடிகராக வேண்டும் 'ஆஸ்கார்' பரிசைப் பெற வேண்டுமென்று இங்கே பலர் கூறினார்கள்.

நான் சினிமாவில் இருந்திருந்தால் கமலஹாசனை வைத்து ஆங்கிலப் படம் எடுப்பேன்.

அவர் ஆங்கிலப் படத்தில் நடித்து 'ஆஸ்கார் விருது' பெற வேண்டும். அதை அவரது தந்தை பார்த்துப் பூரிப்பு அடைய வேண்டும் என்பது என் ஆசை 100 ஆண்டுக்கு மேல் வாழ்ந்து ஒரு தனி சகாப்தத்தை உருவாக்கித் தர வேண்டும்.

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் கூறினார்,

கமல் ரசிகர் நற்பணி மன்றம்

# 300 பேர் கண்தானம் புரட்சித்தலைவரிடம் உறுதிபத்திரம் அளிப்பு

**சென்னை, ஜூன் 27- கமல் ரசிகர்கள் நற்பணி மன்றத்தைச் சேர்ந்த 300 பேர் கண்தானம் அளிப்பதற்கான உறுதிப்பத்திரத்தை முதல்வர் புரட்சித்தலைவரிடம் வழங்கினர்.**

கமல் ரசிகர்கள் நற்பணி மன்ற முதலாம் மாநாடு நேற்று சென்னையில் நடைபெற்றது. காலை நிகழ்ச்சியில் அமைச்சர்கள்அண்டேயும், கோமதி சீனிவாசனும் கலந்து கொண்டனர். ஏழைகளுக்கு இலவசமாகஉடைகள் மற்றும் உதவிகள் வழங்கப்பட்டன.

மாலையில் முதல்வர் புரட்சித்தலைவர் தலைமையில் பாராட்டு விழா நடந்தது. இந்தவிழாவிற்கு அகில இந்திய கமல் ரசிகர்கள் நற்பணி மன்ற தலைவர் ஜி. நாகராஜன் வரவேற்புரையாற்றினார்.

கமலைப் பாராட்டி தென்னிந்திய நடிகர் சங்கத் தலைவர் எஸ். எஸ். ஆர்., அமிதாப் பச்சன், பாலச்சந்தர், ஸ்ரீதேவி, கே. விஸ்வநாத், வி. கே. ராமசாமி, பாரதிராஜா, சரவணன், பிரபு, மணியன், எல். வி. பிரசாத், பாலுமகேந்திரா, வலம்புரி சோமநாதன், ஆகியோர் பேசினர்.

விழாவுக்கு சிகரம் வைத்தாற் போல் முதல்வர் புரட்சித் தலைவர் இறுதியில் கமலை வாழ்த்திப் பேசினார்.

### வி.கே. ராமசாமி நன்கொடை

இந்த விழாவில் நடிகர் வி. கே, ராமசாமி முதலமைச்சர் குழந்தைகள் சத்துணவு திட்டத்துக்கு ரூ.1000 நன்கொடையாக வழங்கினார்.

### வழிகாட்டும் முதல்வர்

பாராட்டுக்கு நன்றி தெரிவித்து கமல் பேசினார். அவர் பேசுகையில் சத்துணவுக்கு நான் கொடுத்த 10 ஆயிரம் ரூபாய் நிதியை முதல்வர் பெரிதாக குறிப்பிட்டார். எங்களுக்கெல்லாம் இது போன்றவைகளை கற்றுத் தந்ததே முதல்வர் தான். அவர் வாழ்வும், நல்லொழுக்கங்களும் எங்களுக்குவழிகாட்டியாக இருக்கின்றன. எனக்கு ஆஸ்கார் பரிசு கிடைக்க வேண்டும் என்றார்கள் தமிழக மக்களின் தலைவர் தமிழக முதல்வர் புரட்சித் தலைவர் தலைமையில்நடக்கும்இந்தபாராட்டுவிழாவை காணும் போது ஆஸ்கார் பரிசு கிடைத்து விட்ட எண்ணமே எனக்கு ஏற்படுகிறது என்று குறிப்பிட்டார்.

அண்ணா அறக்கட்டளை விருது வழங்கு விழாவில் குறிப்பிட்டது போல் ரூ 10 ஆயிரத்துக்கான காசோலையை முதல்வர் புரட்சித்தலைவரிடம் முதலமைச்சர் குழந்தைகள் சத்துணவு திட்டத்துக்காக கமலஹாசன் வழங்கினார்.

தென்னிந்திய திரைப்பட வர்த்தக சபை

## நிர்வாகிகள் தேர்வு

சென்னை, ஜூன் 27— 1983—84ம் ஆண்டிற்கான தென்னிந்திய திரைப்பட வர்த்தக சபை புதிய நிர்வாகிகள் தேர்வு நடைபெற்றது.

தலைவராகஏ.ஆர்.ராஜி துணைத் தலைவர்களாக பழனியப்பன் ராமசாமி, வி. சீனிவாசன், என். சி. சோனி, விட்டல் தாஸ் ஜெகநாத்தாஸ் மற்றும் கௌரவச்செயலாளர்களாக கே, சட்டர்ஜி சி. என்.ராமானுஜம்கௌரவ பொருளாளராக ஆர்.எஸ். பிரபு ஆகியோர் தேர்ந்தெடுக்கப்பட்டனர்,

வருடாந்திர கூட்டத்தில் இவர்கள் தேர்வு அறிவிக்கப்படும்.

## திருமணம்

அசோகா பாக்கு கம்பெனியின் நிர்வாக இயக்குநர் எம். கே. குப்புராஜின் புதல்வர் எம். கே. கண்ணன் பி. இ.க்கும், டாக்டர் முத்து வீரப்பன் குமாரத்தி செல்வி மதுமதிக்கும் கடந்த 23ந்தேதி காலை 10 மணிக்கு ஈரோடு ஸ்ரீ கிருஷ்ண செட்டியார் திருமண மண்டபத்தில் திருமணம் நடந்தது.

அதே தினத்தன்று அதே மணமண்டபத்தில் காலை 9 மணிக்கு எம். கே, குப்புராஜின் புதல்வி செல்வி ராதாவுக்கும், வி. ஆர், கோபாலரத்னகுப்தா புதல்வர் டாக்டர் வி. ஜி. மோகன் பிரசாத்துக்கும் வெகு விமரிசையாகத் திருமணம் நடைபெற்றது.

துப்பாக்கிமுனையில்

## ரூ. 15 கோடி வைரக்கற்கள் கொள்ளை: லண்டனில் பரபரப்பு

லண்டன். ஜூன் 27— விலையுயர்ந்த நவரத்தின கற்கள் விற்கும் கடையொன்றில் சுமார் ரூ.15 கோடி பெறுமானம் உள்ள வைரக்கற்கள் கொள்ளையடிக்கப்பட்டது.

லண்டனில் உள்ள ஒரு இந்திய வியாபாரியின் கடையில் இந்தக் கொள்ளை நடந்தது.

பிரபல ''ஸ்காட்லாண்டு யார்டு'' போலீசாரையே திடுக்கிட வைக்கும் வகையில் இந்தச் சம்பவம் நடந்துள்ளது. உலகத்திலேயே இவ்வளவு அதிகப் பெறுமானம்உள்ள நவரத்தினக் கற்கள் இதுவரை கொள்ளை அடிக்கப்படவில்லை என்றும் கூறப்படுகிறது,

வைரக் கற்களைப் பறிகொடுத்த பிரபல வியாபாரியின் பெயர் செத்ருடி ஜவேரி, துப்பாக்கி முனையில் கொள்ளைக் காரர்கள் இந்தநவரத்னக் கற்களைக் கொள்ளையடித்துக் கொண்டு மாயமாய் மறைந்துவிட்டனர். என்று கூறப்படுகிறது.

லண்டன் போலீசார் கொள்ளைக் காரர்களைக் கண்டுபிடிப்பதில் தீவிரமாக ஈடுபட்டுள்ளனர்.

நெய்வேலிக்கு வந்த முதல்வர் புரட்சித்தலைவரை நிலக்கரி சுரங்க நிதி இயக்குனர் சாஸ்திரி வரவேற்றார்.

# ஆஸ்கார் விருதுபெற கமலஹாசனுக்கு முதல்வர் வாழ்த்து

**சென்னை, ஜூன் 27- அகில உலகப்பரிசான ஆஸ்கார் விருதை நடிகர் கமலஹாசன் பெறவேண்டும் என்று முதல்வர் புரட்சித்தலைவர் வாழ்த்தினார்.**

இந்தியாவிலேயே சிறந்த நடிகராக தேர்ந்தெடுக்கப்பட்டு ஜனாதிபதி விருது பெற்ற நடிகர் கமலஹாசனுக்கு அகில இந்திய கமலஹாசன் ரசிகர்கள் நற்பணி மன்றத்தின் சார்பில்பாராட்டு விழா சென்னை தேனாம்பேட்டை காமராஜர் திடலில் நடந்தது.

விழாவுக்கு முதல்வர் புரட்சித் தலைவர் தலைமை வகித்து கமலஹாசனைப் பாராட்டிப் பேசினார்.

முதல்வர் புரட்சித் தலைவர் பேசுகையில் கூறியதாவது:—

இங்கே டைரக்டர் பாலசந்தர் பேசுகையில் ''கமலஹாசனுக்கு எத்தனை முறை பாராட்டு விழா நடத்தினாலும்நான் சோர்ந்துவிட மாட்டேன். அதில் தவறாமல் கலந்து கொள்வேன்' என்று கூறினார். அந்த கருத்தை என்னோடும் இணைத்துக் கொள்ள விரும்புகிறேன்.

நண்பர் அமிதாப்பச்சன் இங்கே வந்து பாராட்டிய பிறகு இந்தியாவில் இன்னொருவர் பாராட்ட வேண்டுமா என கேட்க விரும்புகிறேன். பம்பாயிலிருந்து அவர் இதற்காக வந்திருக்கிறார்.

கலை உலகில் இந்தியாவில் யார் புகழைப் பெற்றாலும் அது பெருமைக்குரியதுதான். அதில் போட்டியில்லைஎன்பதைக் காட்டும் வகையில் அவர் வந்து கலந்துகொண்டிருக்கிறார்.

### போட்டி தேவையே

இங்கே நான் போட்டி என்று குறிப்பிட்டது பொறாமை என்ற பொருளில் தான். மற்றபடி போட்டி தேவை தான். போட்டி போடுவது திறமையை வெளிப்படுத்தும். ஆனால் பொறாமை பிறருடைய அழிவில் மகிழ்ச்சி அடையும். அந்தப் பொறாமை இங்கே இல்லை என்பதில் நான் மகிழ்ச்சி அடைகிறேன்.

இந்திப்படஉலகில் கமலஹாசன் நுழைவதுகுறித்து அமிதாப்பச்சனோடு இணைத்து ஏதேதோ செய்திகள் வந்தன. ஆனால் இங்கே அமிதாப்பச்சனும் கமலஹாசனும் அண்ணன்—தம்பியாக காட்சியளிக்கிறார்கள். இதுபோன்ற செய்திகளை பத்திரிகைகள் வெளியிடாமல் இருக்கக்கூடாதா? இப்படிப்பட்ட செய்திகளைப் போடுவது இந்திய ஒருமைப்பாட்டிற்கு நட்டமே தவிர, கலைஞர்களுக்கு அல்ல.

அமிதாப்பச்சன் பாராட்டினால் போதும், வேறு யாரும் பாராட்டத்தேவை இல்லைஎன்று நான் குறிப்பிட்டதற்கு காரணம்நான் பல நடிகர்களைப்பார்த்து இருக்கிறேன்; எல்லாவற்றிலும் திறமை மிகுந்த நடிகராக இருப்பது மிகவும் கஷ்டம் அவர் உயர்ந்தவர் நடிப்பில்மட்டுமல்ல; வளர்த்தியிலும்அவர்உயரமானவர். அவர் பெண் வேடம் போட்டுக் கூட சினிமாவில் ஆடியிருக்கிறார். ஆகவே தான் அப்படிப்பட்டவர் பாராட்டுகின்ற போது தான் நமது கமலஹாசன் எவ்வளவு வளர்ந்து இருக்கிறார் என்பதை உணர முடிகிறது.

உயர்வு வரும்போது எல்லோரையும் அரவணைத்துச் செல்லவேண்டும்.

ஒரு நடிகன் தாமரை இலைத் தண்ணீராக இருந்து தனது நடிப்பை வெளிப்படுத்த வேண்டும். சூரிய ஒளிபட்டு தாமரை இலை தண்ணீர் வர்ணஜாலங்களை காட்டுகிறது. அதே சமயம் அது இலையிலும் ஒட்டாமல் இருக்கிறது. அது போல நடிகர்கள் தனது நடிப்பை காட்ட வேண்டும்.

### பெருமைப்படும் வகையில் உள்ளார்

அப்படிப்பட்ட கமலஹாசன் தகுதியிலும், குணத்திலும், பண்பிலும் பெருமைப்படும் வகையில் இருக்கிறார். அவரைப் பாராட்ட கடமைப்பட்டிருக்கிறேன்.

இந்திய அரசு கமலஹாசனுக்கு வழங்கிய 10 ஆயிரம் ரூபாயை சத்துணவு திட்டத்திற்கு வழங்கியிருக்கிறார். நான் சுயநலத்திற்காகவாவது அவரைப் பாராட்டியாக வேண்டும்.

நடிகனுக்கு புகழ் வருகிறது என்றால்எதிர்ப்பு வளர்கிறது என்று பொருள். பயிருடன் சேர்ந்து களை வளருவது போல வரும். அவருடைய முயற்சியால், தகுதியால் அந்தக் களையை எடுக்க வேண்டும்'

இந்தப் புகழ் ஏணியில் அவர் ஒருபடி ஏறியிருக்கிறார். இன்னும் 99 படிகள் அவருக்காககாத்திருக்கிறது. அதை அவர் பெற்றாக வேண்டும்.

### மக்கள் சேவை

கலைஞர்கள் நடிக்கும் போது வலுக்கட்டாயமாக வரவழைக்கும் உணர்ச்சிகளால் உடல் நலம் பாதிக்கப்படும். உடல்நலத்தை பாதுகாத்துக்கொள்ள வேண்டும்.

கமலஹாசன் ரசிகர் மன்றத்தைச் சேர்ந்த 300 இளைஞர்கள் கண்தானம் செய்திருக்கிறார்கள். அதைப் பாராட்டுகிறேன். ரசிகர் மன்றங்களின் எண்ணிக்கை பெரிதல்ல-கட்டுப்பாடு முக்கியம். ரசிகர்மன்றத்தைச்சேர்ந்தவர்கள் ஆங்காங்கே மக்களோடு இணைந்து சேவை செய்யவேண்டும்.

ரசிகர் மன்றங்களை சாதாரணமாக கருதிவிடக்கூடாது. தங்கத்தை உரசிப்பார்க்க உரைகல் தேவை. அந்த உரைகல் தான் ரசிகர் மன்றங்கள். ஒன்றும்தெரியாதவர்கள் அல்ல ரசிகர்கள்.

### ஸ்ரீதேவிக்கு தமிழகஅரசு பரிசு

ஸ்ரீதேவிக்கும் ஜனாதிபதி விருது கிடைத்திருக்க வேண்டும். கமலஹாசனோடு ஸ்ரீதேவி நடித்த சில படங்களைப் பார்த்தேன். நன்றாக நடித்த அவருக்கு ஏன் பரிசு மறுக்கப்பட்டிருக்கிறது; ஒதுக்கப்பட்டிருக்கிறது? அடுத்த ஆண்டாவது ஸ்ரீதேவிக்கு ஜனாதிபதி பரிசு கிடைக்க வேண்டும். இல்லையேல் தமிழக அரசே பரிசைத் தரும்.

கமலஹாசன் உலகின்

(1ம் பத்தி பார்க்க)

# கிரிக்கெட் வெற்றி: மனைவியுடன் நடனமாடி கொண்டாடிய 'கபில்'

லண்டன், ஜூன் 27— உலகக்கோப்பைக்கான கிரிக்கெட் போட்டியில் அபார வெற்றி பெற்ற இந்திய அணியைச் சேர்ந்தவர்கள் நடனமாடி தங்கள் வெற்றியை மகிழ்ச்சியுடன் கொண்டாடினார்கள் இந்திய கிரிக்கெட் வீரர்களுடன், லண்டனில் வசிக்கும் இந்தியர்கள் பலரும் விருந்திலும் நடனத்திலும் பங்கேற்றனர்,

இந்திய கிரிக்கெட் அணியின் காப்டன் கபில்தேவ் தனது மனைவியுடன் சேர்ந்து சிறிது நேரம் நடனமாடினார்,

மோகிந்தர் அமர்நாத், சுனில் கவாஸ்கர், மதன் லால், சந்தீப்பட்டீல் ஆகியோரும் விருந்தினருடன் சேர்ந்து நடனமாடி கிரிக்கெட் ரசிகர்களை மகிழ்வித்தனர்.

விடிய, விடிய நடந்த இந்த விருந்தில், பாகிஸ்தான் கிரிக்கெட் அணியைச் சேர்ந்த சர்பாய் மற்றும் காதர் ஆகியோரும் சிறிது நேரம் பங்கேற்றனர்.

பிரபல கிரிக்கெட் வீரர் சோபர்ஸ் நேரில் வந்து கபில்தேவைப் பாராட்டினார்.

## ரூ. 1 லட்சம் மதிப்புள்ள தங்க கட்டிகள் பறிமுதல்

சென்னை, ஜூன் 27— சென்னை வந்த ஒருகப்பல் பயணியிடமிருந்து ஒருலட்லட்சத்து15ஆயிரம் ரூபாய் மதிப்புள்ள வெளிநாட்டு முத்திரையுள்ள தங்கக் கட்டிகளை சுங்க இலாகா அதிகாரிகள் கைப்பற்றினர் அவர்வைத்திருந்த பையிலும் இடுப்பில் கட்டியிருந்த பெல்டிலும்இந்ததங்கக்கட்டிகளை மறைத்து வைத்திருந்ததை சுங்க இலாகா அதிகாரிகள் கைப்பற்றினர், விசாரணையில் அவர் தஞ்சை மன்னார்குடியைச் சேர்ந்தவர் என்று தெரியவந்துள்ளது. அந்த ஒரே நாளில் மட்டும் சுங்க இலாகா அதிகாரிகள் அந்தக் கப்பலிலிருந்து 78 ஆயிரம் ரூபாய் மதிப்புள்ள கடத்தல் பொருட்களை கைப்பற்றினர்.

# பொ. ப. து.

ஸ்பெஷல் பில்டிங் சர்க்கிள்,
சென்னை.

ஒப்பந்த விவரம் : மொத்த தொகை

## டெண்டர் அறிவிப்பு

எண் 5 எஸ். பி. ஸி./ எம். எஸ்./83-84

தமிழ்நாடு அரசு ஆளுநருக்காக, அவரது சார்பில் கீழ்காணும் வேலைகளுக்கான முத்திரையிட்ட டெண்டர்கள் மேற்பார்வை பொறியாளர் அலுவலகம் பொ.ப.து. ஸ்பெஷல் பில்டிங்ஸ் சர்க்கிள், சேப்பாக்கம், சென்னை -600 005 அவர்களால் கீழ்காணும் வகையில் ஒவ்வொன்றுக்கும் எதிராக குறிப்பிட்டுள்ள தேதிகளில் பிற்பகல் 3 மணிவரை பெற்றுக் கொள்ளப்பட்டு அதே தினம் பிற்பகல் 3-15 மணிக்கு சென்னை-600 005 சேப்பாக்கம் ஸ்பெஷல் பில்டிங்ஸ் சர்க்கிள், பொ.ப.து. மேற்பார்வை பொறியாளர் அவர்களால் திறக்கப்படும்.

| வ. எண் | வேலையின் பெயர் | டேவணித் தொகை | முடிக்கப் பட வேண்டிய காலம் | டெண்டர் பெற்றுக் கொள்வதற்கான இறுதி தேதி |
|---|---|---|---|---|
| 1. | சென்னை-8 எழும்பூர், குழந்தைகள் அருங்காட்சியகத்தின் வெளிப்புற சுவர்களுக்கு மணல் கற்கள் அமைத்துப் பூசுதல் | ரூ. 4,500/- | 2 மாதம் | 19—7—83 |
| 2. | சென்னை - 600005 கஸ்தூரிபாய் காந்தி பெண்கள் & குழந்தைகள் மருத்துவமனையிலுள்ள புதிய அவுட்-பேஷன்ட் பிளாக்கட்டிடத்தின் மீது மேல் மாடி கட்டுதல் | 11.000/- | 7 மாதங்கள் | 21—7—83 |
| 3. | சென்னை-17, மதுரை வீரன் கோயில் தெருவில், 21 சப்- இன்ஸ்பெக்டர்கள் மற்றும் 16 போலீஸ் இன்ஸ்பெக்டர்களுக்கான குடியிருப்புகள் கட்டுதல். | ரூ. 21,300/- | 12 மாதங்கள் | 19-7-83 |
| 4. | காஞ்சிபுரத்திலுள்ள, கலெக்டர் அலுவலக காம்பவுண்டிலுள்ள ஆர். டி. ஓ. அலுவலகத்தின் தனிப்பகுதி கட்டிடத்தின் மீது டி.டி.ஓ. அலுவலகத்திற்கான கட்டிடம் கட்டுதல் | ரூ. 2,800 | 3 மாதங்கள் | 19-7-83 |

| | |
|---|---|
| டெண்டர் கோருவதற்கு தகுதி படைத்த காண்ட்ராக்டர்கள் பதிவு செய்து கொள்ள வேண்டிய வகுப்பு மற்றும் வரம்பு | வரிசைஎண் 1 & 4 க்கு II வது வகுப்பு<br>வரிசைஎண் 2 & 3 க்கு I வது வகுப்பு |
| டெண்டர் குறிப்புகள் கிடைக்கும் தேதி | வரிசைஎண் 1,3,4 க்கு 8-7-83 முதல் 18-7-83 வரை<br>வரிசை எண் 2 க்கு 11-7-83 முதல் 20-7-83 வரை |
| டெண்டர் குறிப்புகள், மற்றும் டேவணித் தொகைக்கான தொகையை செலுத்த வேண்டிய பொதுப்பணித் துறை, நிர்வாகப் பொறியாளர் | வரிசை எண் 1 & 3 க்கு பில்டிங்ஸ் டிவிஷன் எண் I சென்னை-600005<br>வரிசை எண் 2 க்கு பில்டிங்ஸ் டிவிஷன் எண் III சென்னை-600005<br>வரிசை எண் 4 க்கு பில்டிங்ஸ் டிவிஷன் காஞ்சிபுரம் |

டெண்டர் பத்திரங்கள், மத்திய மாநில அரசுகளின், நிறுவனங்கள் மற்றும் இதர இலாக்காக்களில் பதிவு செய்து கொண்டுள்ள காண்ட்ராக்டர்களுக்கு அளிக்கப்படும். தகுதி படைத்த வகுப்பிற்கு ஒரு வகுப்பு குறைவாக பதிவு செய்துள்ள காண்ட்ராக்டர்களுக்கும் டெண்டர் குறிப்புகள் அளிக்கப்படும். அவர்களுக்கு இந்த வேலை அளிக்கப்பட்டால், வேலை ஏற்றுச் செய்வதற்கு முன்னதாகவே தங்கள் பெயரை உயர்ந்த வகுப்பில் பதிவுசெய்து கொள்ள வேண்டும்.

டெண்டர் பத்திரங்கள், வரைபடங்கள் ஆகியவை ஒவ்வொரு வேலைக்கும், விற்பனை வரி&சர்சார்ஜ்உட்பட ரூ. 79.15 ஆகும். மேற்கண்ட தொகை எக்காரணத்தை முன்னிட்டும் திருப்பியளிக்கப்படமாட்டாது.

வேலைக்கான டெண்டர் பத்திரங்கள் மற்றும் இதர விவரங்கள் ஆகியவை மேற்பார்வை பொறியாளர் அலுவலகம், பொ. ப து. ஸ்பெஷல் பில்டிங்ஸ் சர்க்கிள் சென்னை அவர்களிடமிருந்து எல்லா அலுவலக நாட்களிலும் அலுவலக நேரங்களில் பெற்றுக்கொள்ளலாம்.

டெண்டர் திறக்கப்படும் தேதி, எக்காரணத்தை முன்னிட்டாவது அரசு விடுமுறையாக அறிவிக்கப்பட்டால் டெண்டர்கள் அதற்கு அடுத்த வேலை நாள் பிற்பகல் 3 மணி வரை பெற்றுக்கொள்ளப்பட்டு, அதே தினம் பிற்பகல் 3-15 மணிக்கு திறக்கப்படும்.

மேற்பார்வை பொறியாளர்

சென்னை-5

DIPR-28138-83-16 -SAS

PUBLISHED BY K RAVINDRAN ON BEHALF OF THANGAMANI PUBLICATIONS AND PRINTED BY HIM AT ALL INDIA ANNA D M K PERARIGNAR ANNA TRUST PRESS AT 34, NELSON MANICKAM ROAD MADRAS 600 029

EDITOR: E. PARASURAMAN

## பிலிம்நியூஸ் ஆனந்தன் புகைப்பட கண்காட்சி

சென்னை, ஜூன். 27— சென்னையில் நேற்று நடந்த அகில இந்திய கமலஹாசன் ரசிகர்கள் நற்பணி மன்ற மாநாட்டில் பிலிம்நியூஸ் ஆனந்தனின் கமலஹாசன் புகைப்படக் கண்காட்சியும் இடம் பெற்றது.

இந்தப்புகைப்படக் கண்காட்சியில் களத்தூர் கண்ணம்மா முதல் சலங்கை ஒலி வரை கமலஹாசனின் பல்வேறு வகையான புகைப்படங்கள் இடம் பெற்றன,

(6ம் பத்தி தொடர்ச்சி)

புகார்களைதெரிவித்தார்.

சவுரிராஜன் கூறியதாவது:-

பதவியில் இருந்தபோது தி. மு. க. மந்திரிகள் பல்வேறு ஊழல்களைச் செய்து இருக்கின்றனர். முறைகேடுகள் நடந்துள்ளன. ஊழலும், லஞ்சமும் மலிந்து இருந்தன.

அரசாங்க சாராய ஆலைகளில் இருந்து ஸ்பிரிட்டை எடுத்துச் செல்ல அனுமதி வழங்கியதில் ஊழல் நடந்துள்ளது.

அரசு பரிசு சீட்டை நடத்த தனியாரிடம் அனுமதித்ததில் ஊழல் நடந்துள்ளது,

இப்படி பல்வேறு ஊழல்கள் நடந்துள்ளன. இவைகள் குறித்து விசாரணை நடத்த புதுவை கவர்னர் உத்திரவிட வேண்டும்.

இவ்வாறு சவுரிராஜன் கோரிக்கை விடுத்தார்.

பால் பண்ணை அமைப்புத்தேர்தல்:

## இந்தியாவில் அதிக வாக்கு பெற்று சேலம் கண்ணன் வெற்றி

புதுடெல்லி, ஜூன் 27- இந்திய பால் பண்ணை அமைப்பின் மத்திய நிர்வாகக் குழுவிற்கு நடந்த தேர்தலில் இந்தியாவிலேயே அதிக வாக்குகள் பெற்று சேலம் மாவட்டக் கழகச் செயலாளர் பி. கண்ணன் வெற்றி பெற்றார்.

இந்திய பால் பண்ணை அமைப்பு பால்வளத் துறையில் மத்தியஅரசுக்கு ஆலோசனைகளும் பரிந்துரைகளும் செய்கின்ற சக்தி வாய்ந்த அமைப்பாகும்.

அகில இந்திய பால் உற்பத்தியாளர்களின் நலனைக் காக்க உருவாக்கப்பட்ட இந்த அமைப்பு டெல்லியைத் தலைமையகமாகக்கொண்டு செயல்படுகிறது.

இந்த அமைப்பிற்கு இரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை தேர்தல் நடைபெறும். இந்த ஆண்டு இந்த அமைப்பின் மத்திய நிர்வாகக் குழுவிற்கு நடந்த தேர்தலில் அனைத்திந்திய அண்ணா திமு கழகத்தின் சேலம் மாவட்ட செயலாளரும் சேலம்மாவட்ட கூட்டுறவு பால் உற்பத்தியாளர் ஒன்றியப் பெருந்தலைவருமான சேலம் பி. கண்ணன் வெற்றி பெற்றார். இந்தியாவிலேயே அதிக வாக்குகள் பெற்று கண்ணன் வெற்றி பெற்று இருப்பது குறிப்பிடத் தக்கதாகும்.

இந்தத் தேர்தலில்கடும் போட்டியிருந்தபோதும் கண்ணனோடு குஜராத் மாநில முன்னாள்பொதுப் பணித்துறை அமைச்சர் மோதிபாய் ஆர். சவுத்திரியும் வெற்றி பெற்றார், அகில இந்திய அளவில் கோடிக் கணக்கான பால் உற்பத்தியாளர்களின் பிரதிநிதிகளாக இருவரும் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளனர்.

விஞ்ஞானிகள், பால் பண்ணை வல்லுனர்கள், பால்பண்ணை ஆராய்ச்சி வல்லுனர்கள், தொழில் நுட்ப அதிகாரிகள் ஆகியோரும் இந்தக் குழுவில் அங்கம் வகிக்கின்றனர்.

## கழகத்தோழர் தாயார்மறைவு: அமைச்சர் காளிமுத்து ஆறுதல்

மதுரை, ஜூன் 27— மதுரை கிழக்குத் தொகுதி 35-வது வட்ட கழக செயலாளர் ஜி. கிருஷ்ணமூர்த்தியின் தாயார் மீனாம்பாள்ராவ் கடந்த 18-ந் தேதியன்று காலமானார்.

தகவலறிந்த அமைச்சர் காளிமுத்து கடந்த 24-ந் தேதி ஜி. கிருஷ்ணமூர்த்தியின்இல்லத்துக்குச்சென்று ஆறுதல் கூறினார்.

அமைச்சருடன் துணை மேயர் முனியசாமி, ஏ.பாலுசாமி எம்.எல்.ஏ. வெ. பாலகுரு, கே. எஸ். ராசேந்திரன், முத்துராமன், கலையரசன் ஆகியோரும்சென்றிருந்தனர்.

## தீவிபத்து: 150 கடைகள் சாம்பல்

பெங்களூர், ஜூன் 27- பெங்களூரில் சிட்டி மார்க்கெட்பகுதியில் நேற்றிரவு திடீர் என தீப்பிடித்தது.

இந்த தீ விபத்தில் 150க்கும் மேற்பட்ட கடைகள் எரிந்து சாம்பல் ஆயின.

தீ விபத்தின் காரணமாக, 15 லட்ச ரூபாய் மதிப்புள்ள பொருட்கள் சேதமடைந்ததாக நகர போலீஸ் கமிஷனர் ஹர்லாங்கர் தெரிவித்தார்.

இரவு நேரத்தில் தீ விபத்து ஏற்பட்டதால் கடைகளில் யாரும் இல்லை. அதனால் உயிர் சேதம் ஏதுமில்லை என தெரிவிக்கப்பட்டுள்ளது.

## பஞ்சாபில் தொடர்ந்து வன்முறை: கோயில் அர்ச்சகர் படுகொலை

### பலபகுதிகளில் கத்திக்குத்து, கலவரம்

ஜலந்தர், ஜூன் 27- பஞ்சாபில் தொடர்ந்து வன்முறை சம்பவங்கள் நடந்தவண்ணம் உள்ளன. ஒரு கோயில் அர்ச்சகர் கத்தியால் வெட்டிக் கொலை செய்யப்பட்டார். பல பகுதிகளில் கத்திக்குத்துக் கலவரங்கள் ஏற்பட்டன.

சண்டிகார் தலைநகரை பஞ்சாப் மாநிலத்துடன் சேர்க்கவேண்டும் மாநிலத்துக்கு அதிக அதிகாரம் கொடுக்கப்பட வேண்டும். பஞ்சாப் தனி நாடாக பிரிக்கப்பட வேண்டும் என்ற கோரிக்கைகளை வலியுறுத்தி அகாலிதள சீக்கியர்கள் போராட்டம் நடத்திவருகிறார்கள். வன்முறை சம்பவங்களிலும் அவர்கள் அவ்வப்போது ஈடுபட்டு வந்தனர். அகாலிதள சீக்கியத் தலைவர்களுடன் மத்திய அரசு பேச்சு வார்த்தை நடத்தவும் ஏற்பாடு செய்தது. ஆனாலும் அகாலிதள சீக்கியர்கள் வன்முறை சம்பவங்களில்ஈடுபடுவதை நிறுத்தவில்லை. கடந்த 2 நாட்களாக வன்முறை சம்பவங்கள் தொடர்ந்து நடக்கத் தொடங்கி விட்டன. ஆங்காங்கே கத்திக்குத்து அடிதடி சம்பவங்கள் நடந்தன.

### கோஷ்டி தகராறு

கல்வீச்சு சம்பவங்கள் நடந்தன. ஜலந்தர் பகுதிகளில் பயங்கர சம்பவங்கள் நடந்தன. நிராங்கரி சீக்கியர் கோயிலைச் சேர்ந்த அறங்காவலர்களுக்கும், சோதால் சீக்கியர் கோயில் அறங்காவலர்களுக்கும் இடையே ஏற்பட்ட தகராறு பின்னர் பெரும் பூசலாக உருவெடுத்தது என்று சொல்லப்படுகிறது. இந்தக் கோஷ்டிகள் ஒன்றை ஒன்று தாக்கிக் கொண்டன.

ஜலந்தர் மற்றும் கபூர்தலா பகுதியில் ஒரு வாலிபர் கத்தியால் குத்தப்பட்டார். கோயில் அர்ச்சகர் ஒருவர் வெட்டிக் கொல்லப்பட்டார். அவர் பெயர்ராமசுவரூப். பீகார் மாநிலத்தைச் சேர்ந்தவர். மற்றொரு அர்ச்சகரும் கத்தியால் குத்தப்பட்டார்.

நாதாவாலா சீக்கியர் கோயிலைச் சேர்ந்த 2 சீக்கிய வாலிபர்கள் பசில்காவைச்சேர்ந்தமோகன்லால் என்ற மற்றொரு அர்ச்சகரைக் கத்தியால் குத்தி காயப்படுத்தினர் என்று கூறப்படுகிறது.

### வெடி குண்டுக்கு 2 பேர் பலி

கத்தியால் குத்தப்படும் போது மோகன்லால் கோயிலில் படுத்துத் தூங்கிக் கொண்டிருந்தார் என்று கபூர்தலா போலீஸ் சூப்பிரெண்டு ஆர். எஸ். சாலியா கூறினார். ஜலந்தர் மற்றும் கபூர்தலா பகுதிகளில் கல்வீச்சு சம்பவங்களும் நடந்தன. கடைகள் சில சேதமாயின.

கலவரப் பகுதிகளை பஞ்சாப் மாநிலபோலீசார் மத்திய ரிசர்வ் போலீசார் கண்காணித்து வருகிறார்கள்.

எல்லாப் பகுதிகளிலும் தீவிர பந்தோபஸ்து போடப்பட்டுள்ளது.

போலீசார் பலமுறை கண்ணீர் புகைக் குண்டுகளை வெடித்து கூட்டத்தை கலைக்க முற்பட்டனர். ஒரு சீக்கியர் கோயில் எதிரே நாட்டு வெடி குண்டு ஒன்று வெடித்ததால் இரண்டு பேர் உயிரிழந்தனர். பலர் காயமடைந்தனர்.

போலீசார் தீவிர பந்தோபஸ்து நடவடிக்கைகளை மேற்கொண்டிருக்கிறார்கள்.

(4-ம் பத்தி தொடர்ச்சி)

அம்பலப்பேட்டையைச் சேர்ந்த வேறு ஒரு பெண்ணை பார்த்து நிச்சயம் செய்து விட்டதாகவும், என்னை யாரும் ஒன்றும் செய்துவிட முடியாது என்றும், அதையும் மிஞ்சி என்னை வற்புறுத்தினால் உன்னைக் கொலைசெய்து விடுவேன் என்றும் மிரட்டினாராம்.

இது குறித்து தையல் நாயகி மாவட்ட கலெக்டர் கரியாலியிடம் புகார் கொடுத்தார். இது குறித்து உடனடியாக நடவடிக்கை எடுக்குமாறு கடலூர்போலீசாரிடம்கரியாலி தெரிவித்தார். உடனேபோலீசார்அம்பலப்பேட்டைக்கு விரைந்து சென்றனர். ஆனால் அதற்குள் ராஜாமணி தலைமறைவாகி விட்டார் இதனால் நிச்சயிக்கப்பட்ட திருமணம் நிறுத்தி வைக்கப்பட்டது.

குஜராத் வெள்ளம்:

## சாவு எண்ணிக்கை 755ஆகஉயர்வு

அகமதாபாத், ஜூன் 27— குஜராத் சௌராஷ்டிரா பகுதியில் தொடர்ந்து ஒருவாரகாலமாக பெய்த மழை, புயல் காரணமாக இதுவரை 755 பேர் உயிரிழந்தனர்.

இதில் இதுவரை 114 சடலங்கள் மீட்கப்பட்டுள்ளன. இது தவிர மேலும் 283 பேர்களைக் காணவில்லை. இவர்களும்வெள்ளத்தில் சிக்கி இறந்திருக்கலாம் என கருதப்படுகிறது.

ஜுனாகத் என்ற நகரம் வெள்ளத்தில் மூழ்கியதால் அங்கு மீட்பு படகுகள்அனுப்பப்பட்டுள்ளன. வெள்ளத்தால் பல பகுதிகளில் மின்சார சப்ளை துண்டிக்கப்பட்டுள்ளது. இப்பகுதிகளை பார்வையிட பிரதமர் இந்திராகாந்தி நாளை குஜராத் செல்கிறார். அங்கு அவர் விமானம் மூலம் வெள்ளத்தால் பாதிக்கப்பட்ட இடங்களை பார்வையிடுகிறார்.

பதவியில் இருந்தபோது புதுவையில் பல்வேறு

## ஊழல்கள் புரிந்த தி. மு. க. மந்திரிகள் மீது விசாரணைக் கமிஷன்

### மாஜி மந்திரி சவுரிராஜன் கோரிக்கை

பாண்டிச்சேரி, ஜூன் 27- பதவியில் இருந்தபோது எரிசாராய ஊழல்உட்படப் பல்வேறு ஊழல்கள் புரிந்த திமுக மந்திரிகள் மீது விசாரணைக் கமிஷன் நியமிக்கப்படவேண்டும் என்று மாஜி காங்கிரஸ் மந்திரி சவுரிராஜன் கோரியுள்ளார்.

புதுவை தி. மு. க. முதல்வராக இருந்த டி. ராமச்சந்திரன் மீதும் மாஜி தி. மு. க. மந்திரிகள் மீதும் பல்வேறு குற்றச்சாட்டுகள் சொல்லப்பட்டுள்ளன.

புதுவையில் தி. மு. க. ஆட்சி நடந்த போது எல்லா மட்டத்திலும் ஊழலும், லஞ்சமும் ஊற்றுக்கண்களாக இருந்தன.

ஊழலுக்கும் லஞ்சத்துக்கும் முறைகேடுகளுக்கும் மொத்த வியாபாரிகளாக புதுவை மந்திரிகள் செயல்பட்டனர்,

கழகத்தின் சார்பில் புதுவை மாநில செயலாளர் பி.கே. லோகநாதன் தி. மு. க. மந்திரிகள் மீது பல்வேறு குற்றச்சாட்டுக்கள் அடங்கிய மகஜரை கவர்னரிடம் கொடுத்தது தெரிந்ததே.

மாஜி தி. மு. க. மந்திரிகள் மீது விசாரணைக் கமிஷன் நியமிக்கப்பட வேண்டும் என்று லோகநாதன் கோரியுள்ளார்.

புதுவை ஜனதாவும் தி. மு. க. மந்திரிகள் மீது ஊழல் பட்டியல் தந்து இருக்கிறது.

தி.மு.க.வில்எம்.எல்.ஏ. ஆகஇருந்த ராமலிங்கம் தி. மு, க. மந்திரிகள் மீது 11 ஊழல் குற்றச்சாட்டுக்களைகவர்னரிடம் தந்தார்.

திமுக மந்திரிகள் மீது பல்வேறு புகார்கள் வந்துள்ளதாக ஆளுநரும் தெரிவித்து இருக்கிறார்.

புதுவை திமுக மாஜி முதல்வர் டி. ராமச்சந்திரன் மற்றும் மாஜி தி மு க மந்திரிகள் மீது இந்திரா காங்கிரஸ் மாஜி மந்திரி சவுரிராஜனும் பல்வேறு ஊழல் குற்றச்சாட்டுகளை தெரிவித்துள்ளார்.

புதுவையில் நடந்த ஒரு கூட்டத்தில் சவுரிராஜன் பேசும்போது திமுகவினர் மீது பல்வேறு ஊழல்

(3ம் பத்தி பார்க்க

## காதலிக்கு தெரியாமல் நடக்க இருந்த திருமணம் நின்றது

### புகார் மீது கலெக்டர் நடவடிக்கை

விழுப்புரம், ஜூன் 2'- மணமகனின் காதலி கொடுத்த புகாரின் பேரில், நிச்சயிக்கப்பட்டு நடைபெறவிருந்த திருமணத்தை போலீசார் தடுத்து நிறுத்தினர். மாவட் கலெக்டரிடம் அந்த காதலி கொடுத்த புகாரின் பேரில் இந்த நடவடிக்கை எடுக்கப்பட்டது.

கடலூர் குடிக்காடுகிராமத்தை சேர்ந்தவர் ராஜாமணி. (வயது 27) இவர் அதே பகுதியைச் சேர்ந்த தையல்நாயகி (வயது 25) என்ற பெண்ணை இரண்டு வருடமாக காதலித்து வந்தாராம். பிறகுஇருவரும் திருமணம் செய்ய முடிவு செய்தனர். ஆனால் தையல் நாயகியால் வரதட்சணை கொடுக்க முடியவில்லை. இதனால் ராஜாமணி வேறு பெண்ணை திருமணம் செய்ய முடிவு செய்தாராம். இதையறிந்து தையல்நாயகி உடனே போலீசில் புகார் செய்தார். போலீசார் அங்கு வந்து விசாரித்த போது பஞ்சாயத்தார் தலையிட்டு அதை சுமுகமாக முடிப்பதாக உறுதி கூறினர்.

இதை யொட்டி ராஜாமணிக்கும், தையல் நாயகிக்கும் ஜனவரி மாதம் திருமணம் நடப்பதாக இருந்தது,

### கொலை மிரட்டல்

இதற்கிடையில் ராஜாமணி திடீரென்று தலைமறைவாகி விட்டார். இரண்டு மாதம் கழித்து ராஜாமணி மீண்டும் ஊருக்குத் திரும்பி வந்தபோதுதையல்நாயகிஎங்கு போயிருந்தீர்கள் என்று கேட்டார். அதற்கு ராஜாமணிதான்

(7-ம் பத்தி பார்க்க)